11th December 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM: இது ஆங்காங்கு இருக்கும் வேலையைப் பொறுத்து இருக்கிறது. இதை நிர்ணயித்து முறைப்படுத்துவதற்கு பஞ்சாயத்து யூனியன் சேர்மன் இருக்கிறார், கமிஷனர் இருக்கிறார். இருக்கக்கூடிய வேலையைப் பொறுத்து எந்த அளவு சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டும், எந்த அளவு அலுவலகத்தில் இருக்கவேண்டுமென்று பார்த்து முடிவு செய்யலாம்.

SRI A. GOVINDASAMY: இப்போது பிளாக் டெவலப்மெண்டைச் சேர்ந்த அதிகாரிகள் சுற்றுப்பிரயாணம் செய்கின்ற அளவுக்கு அவர்களுக்குத் தரப்படும் தொகை சரியாக இருக்குமா? அல்லது பற்றாக்குறையாகத்தான் இருக்குமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: போதுமானதாக இருக்கும் என்றுதான் இந்த அளவுக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

SRI C. NATARAJAN: தலைவர் அவர்களே, இப்போது புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள யூனியன்களில் இருக்கின்ற கமிஷனருடைய பிரயாணப்படி பில்லை சேர்மன் பரிசீலனை செய்து மேலுக்கு அனுப்ப வேண்டிய நிலையில் விதி இருக்கிறது. பிரயாணப்படி பில்லில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு அனுப்பப்படுவதால் சேர்மனுக்குப் புரியவில்லை என்று சொல்லுகிறார்கள். தமிழில் எழுதி அனுப்பும் அளவுக்கு விதிகள் திருத்தப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதைப்பற்றி இந்தக் கேள்வியில் பதில் சொல்ல முடியாது. கூடுமானவரையில் எல்லாம் தமிழில் வருவதற்குத்தான் முயற்சி செய்யப்பட்டுவருகிறது.

*Engineering College for Tiruchirappalli*

*2235 Q.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the management of the Seshasayee Polytechnic has offered to open an Engineering College at Tiruchirappalli: and

(b) if so, the action taken by the Government in that regard?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Yes.

(b) As the Government of India propose to start a Regional Engineering College at Tiruchirappalli, the offer of the Seshasayee Memorial Engineering Committee has not been pursued.

*Sugar Mill Workers (Representation)*

*2236 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லா கூட்டுறவு சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் ஒன்பது கோரிக்கைகளைக்கொண்ட ஒரு மனுவை அனுப்பியுள்ளார்களா?

(இ) அதன்மீது என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது?

[11th December 1961

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Only a copy of the petition, dated 26th September 1961, from the North Arcot District Co-operative Sugar Mill Workers' Union addressed to the management was received.

(b) As there was no request by the Union for taking action on the demands, no action was taken.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்போது சமீபத்திலே அந்தத் தொழிலாளர்கள் கோரிக்கைகளைக் கேட்டுவரக் கூடிய நேரத்தில் முதலாளிகள் காண்டிராக்ட் ஸிஸ்டம் அடிப்படையில் முறையே மாற்றுகிறார்களே. ஏற்கனவே வேலை செய்து கொண்டிருக்கிற தொழிலாளிகளை காண்டிராக்ட் முறைக்கு வரும்படி கேட்கிறார்களே. அதனால் தொழிலாளிகளுக்கும் நிர்வாகத்திற்கும் இடையில் தகராறு ஏற்படுகிற நிலைமை பற்றி கனம் அமைச்சருக்குத் தெரியுமா? ஆம் என்றால், உடனடியாக இது விஷயத்தில் சுமுகமான நிலைமையை உண்டாக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி என்னிடம் தகவல் ஒன்றுமில்லை.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே இப்படிப்பட்ட கூட்டுறவு நிர்வாகத்தில் அரசாங்கம் தலையிட முடியாத அளவுக்கு விதி இருப்பதாகச் சொல்லுகிறார்களே அது உண்மைதானா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கம் தலையிடக்கூடாது என்பது ஒன்றும் இல்லை. எந்தெந்த நேரத்தில் தலையிடவேண்டுமோ அந்தந்த நேரத்தில் தலையிடும்.

*Power-cut (Industries)*

* 2238 Q.—SRI A. A. RASHEED :
SRI N. K. PALANISAMI : } Will the Hon. the Minister for Home be pleased to state the number of workers affected by the lay off in the Industries due to recent power-cut in the State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 25,893 (Twenty-five thousand eight hundred and ninety-three).

SRI A. A. RASHEED : Sir, may I know the total loss sustained by the industries by way of production due to this power-cut?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am sorry, I do not have the particulars with me.

SRI K. ANBAZHAGAN : இந்த மின்சாரத் தட்டுப்பாடு காரணமாக இவ்வளவு பேர்கள் வேலை வாய்ப்பை இழந்த நிலைமை ஏற்கெனவே ஏற்பட்டிருக்கிற காரணத்தினால் இனி எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஏற்படாது என்று கனம் அமைச்சர் அவர்கள் உறுதி கூறுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : உறுதி ஒன்றும் கூற முடியாது. ஆனால் மின்சார உற்பத்தி பெருக்கப்பட்டு வருகிறது.